# சரஸா பி. ஏ.

## கதைச் சுருக்கம்

“பகையாளி குடியை உறவாடிக் கெடு” என்பது பழமொழி. பள்ளித் தோழன் குடியை உறவாடிக் கெடுக்கத் துணிந்தான் மனோஹர். தன் மகன் வாசுவையும், அண்ணன் மகள் சரஸாவையும் இரு கண்களாகக் காப்பாற்றி வளர்த்தாள் கல்யாணி அம்மாள். சரஸா, பி. ஏ. முதல் வகுப்பில் தேறினாள். வாசு எம். ஏ. பட்டம் பெற்றான். அவனுக்கு பெங்களூரில் ஒரு கம்பெனியில் மானேஜர் வேலை கிடைத்தது. அவன் வேலை ஒப்புக்கொள்ளு முன் சரஸாவுக்கும் அவனுக்கும் மணம் செய்து வைத்துவிட விரும்பினாள்.........அவள் ஆசை நிறைவேறியிருந்தால்..........?

வேலையில் சேர்ந்த பிறகுதான் கல்யாணம் என்று பிடிவாதம் பேசி வாசு தாயையும். சரஸாவையும் அழைத்துக்கொண்டு பெங்களூருக்குப் புறப்பட்டான். அந்தக் குடும்பத்தின் மகிழ்ச்சி நிறைந்த வாழ்க்கையில் ஒரு புயலைப் புகவிட பெங்களூரில் காத்திருந்தான் மனோஹர்.

மனோஹர் வாசுவின் கல்லூரித் தோழன். வக்கிலுக்குப் படிப்பதாகச் சொல்லித் தந்தையிடமிருந்து பணம் வரவழைத்து இளம் பெண்களை அழைத்து சிங்கார ஓவியங்கள் வரைந்து தள்ளிக் கொண்டிருந்தான். வாசுவும் சரஸாவும் லால்பாக் உல்லாசத் தோட்டத்தைக் காணச் சென்றார்கள். அங்கேதான் மனோஹர் சரஸாவைச் சந்தித்தான். அந்த நொடியிலேயே அவளைத் தான் அடைந்தே தீரவேண்டும் என்று உறுதி செய்து கொண்டான்.



நண்பன் என்ற முறையில் வாசு வீட்டுக்குச் சென்ற மனோஹர். கல்யாணி அம்மாளிடம் தாய் உறவு கொண்டாடி ஒட்டிக்கொண்டான். சரஸாவை ஓவியத்தில் திட்ட அந்த அம்மாளின் சம்மதத்தையும் பெற்றான். சரஸாவுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. இருந்தும் அத்தைக்காகவும், அத்தான் வாசுவுக்காகவும் இசைந்தாள். வாசு கம்பெனி வேலையில் தன்னை மறந்து ஈடுபட்டிருக்க மனோஹர் மெள்ள மெள்ள சரஸாவின் உள்ளத்தை வளைத்துப் பிடிக்கத் தனக்குத் தெரிந்த வித்தைகளையெல்லாம் செய்து பார்த்தான். பலிக்கவில்லை. அதனால் அவன் சூழ்ச்சியில் இறங்கினான்.

வாசு அழைத்து வரச் சொன்னதாகச் சொல்லி மனோஹர் சரஸாவைத் தனியாக சினிமாவுக்கு அழைத்துச் சென்றான். அதே சமயம் மனோஹரின் கையாள் ஜூனியர் வாசுவிடம் சரஸாவின் மனம் மனோஹர் மேல் சாய்ந்து விட்டது என்று சொல்லி அவன் உள்ளத்தில் வெறுப்புத் தீயை மூட்டி விட்டான்

அந்த நேரத்தில் கம்பெனி வேலையாக ஒருவர் ஹைதரபாத்துக்கு போக வேண்டிய அவசியம் நேர்ந்தது. சரஸாவின் மேல் பிறந்த வெறுப்பினால் வாசு தானே ஹைதராபாத் போக முடிவு செய்தான். கம்பெனி காரிலேயே புறப்பட்டான்.

விதியும் மனோஹருக்குச் சாதகமாக கை கொடுக்க முன் வந்தது!

.........ஜமீன்தாரின் சகோதரியின் மகன் சேகர் மைசூர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அந்தக் கல்லூரியைச் சேர்ந்த ஒரு புரொபசர் கொலை செய்யப்பட்டார். சேகர் மேல் சந்தேகம் விழுந்தது. சந்தர்ப்ப சாட்சியங்களும் அப்படி அமைந்தன. போலீசுக்குத் தப்பி சேகர் பெங்களூர், ஹைராபாத் சாலையின் அருகில் ஒரு குடிசையில் ஒளிந்திருந்தான். அந்த எல்லையை யடைந்த வாசு காரில் தண்ணீர் இல்லாமல் சூடு ஏறுவதைக் கண்டு தண்ணீருக்காகக் குடிசைக் கதவைத் தட்டினான்.

ஒருவரையொருவர் பார்த்து திடுக்கிட்டுத் திகைத்து நின்றார்கள். வாசுவும் சேகரும் இருவரும் இரட்டைப் பிள்ளைகளோ என்று கருதும்படி இருவருக்கும் உருவ ஒற்றுமை அமைந்திருந்தது. அந்த ஒற்றுமையைப் பயன்படுத்திக் கொள்ள முடிவு செய்தான் சேகர். வாசுவின் தலையில் பலமாகத் தாக்கி அவன் மூர்ச்சையடைந்தவுடன் அவனுடைய உடைகளைத் தான் அணிந்துக்கொண்டு காரை ஓட்டிக்கொண்டு ஹைராபாத்துக்குப் புறப்பட்டான். போகும் வழியில் போனில் போலீஸைக் கூப்பிட்டு மைசூர் கல்லூரி புரொபசரைக் கொலை செய்த சேகர் அந்தக் குடிசையில் ஒளிந்திருப்பதாக அறிவித்தான். போலீஸார் வந்து வாசுவை சேகர் என்று கைது செய்தார்கள்.

வாசுவின் பின்னாலேயே ஹைதராபாத்துக் சென்ற மனோஹர் வாசுவாக நடித்த சேகருக்கு நல்ல குடிபோதை ஏற்றிக் காரில் வைத்து ஒரு காட்டு வழியில் கொண்டு போய், காரின் மேல் நிறைய பெட்ரோலை ஊற்றி அதற்கு நெருப்பு வைத்து விட்டான். போதையிலிருந்த சேகர் காருடன் கருகி மடிந்தான்.

சேகரின் தாய்... ஜமீன்தாரின் சகோதரி மீனாட்சி தன் மகன் கொலைக் குற்றம் சாட்டப்பட்டுப் போலீஸில் இருப்பதாக அறிந்து மைசூருக்கு ஓடினாள். அதே சமயம் புரொபசரைக் கொலை செய்தது சேகர் அல்ல என்ற உண்மையும் வெளியாகியது மீனாட்சி வாசுவைத் தன் மகன் சேகர்தான் என்று வீட்டுக்கு அழைத்துச் சென்றாள்.

வாசு கார் விபத்தில் மாண்டு விட்டதாகச் செய்தி எட்டியது அவன் தாய்க்கு. சரஸா துடித்தாள். மனோகர் அவர்களுக்கு ஆறுதல் சொல்லி நடித்து. நடித்து தானே சரஸாவை மணந்து கொள்ள .....அம்மாளின் சம்மதத்தையும் பெற்றான்.

மனோஹர் சரஸாவின் கழுத்தில் தாலியைக்கட்டி அவளைத் தன் மனைவியாக்கிக் கொள்ளுவதற்கு முன் வாசு வந்து சேர்ந்துவிடுவானா? சரஸாவின் வாழ்க்கை என்ன ஆகும்? **வெள்ளித் திரை விளக்கிக் காட்டும்.**



-: பாடல்கள் :-

**இயற்றியவர் : கோவை குமாரதேவன்**  பாடியவர்கள் : **ஜமுனாராணி**
**திருச்சி லோகநாதன்**
**குழுவினர்**

கன்னிருப் பருவம் துள்ளுதுங்க
காதல் கொள்ளச் சொல்லுதுங்க
முத்தம்மா ஓ முத்தம்மா
சேவலுக்கு மயில் வேஷம் போட முடியுமா ?—அப்படிப்
போட்டாலும் மயிலைப்போல் ஆடமுடியுமா ?
ஆவலுக்கு எல்லாருந்தான் போடமுடியுமா ?
அப்படி போட்டாலும் ரசிக்கும்படி நடிக்கமுடியுமா ?
அப்படி போட்டாலும் என்னைப்போல நடிக்கமுடியுமா ?
[கன்னிப் பருவம்]

பாரின் காட் எந்த டான்சும் ஆடியதில்லை
அவன் ஆடியதாய் நாவலேதும் கூறியதில்லை
ஆனால் பாருங்க, ஆங்கிலேயன் தானுங்க
ஆடுறான், பாடுறான், ராக் ராக்குன்னு கத்துறான்

பியூட்டிபுல் லேடியை தலையிலே வைத்து
சிவன் ஆடினான் ஸ்பீட் டான்ஸ்
பிருந்தாவனம் என்ற பார்க்கில் ஜாலியாய்
கிருஷ்ணன் ஆடினான் ஸ்மூத் டான்ஸ்

பிக்கஸ்ட் டான்ஸர் நடராஜன்
தில்லையில் ஆடினான் த்ரிலிங் டான்ஸ்
இந்த ஆதாரம் இருந்தும் இவன் ஓடுறான்
ஆதாரமில்லாமே அவன் ஆடுறான்
இவன் ஓடுறான்—அவன் ஆடுறான்

**இயற்றியவர் : கவிஞர் கண்ணதாசன்**  பாடியவர் : **ஜானகி**

கண்ணொன்று நாடும் கையொன்று தேடும்
மனம் ஒன்று எண்ணும் வாயொன்று சொல்லும்

வேடிக்கை உலகத்தை நினைத்தேனே—இங்கே
வேதனை உலகத்தில் விழுந்தேனே

ஆடிடும் கலைதனை அறிந்தேனே
புகழ் ஆயிரம் வருமென நினைத்தேனே
வாடிக்கைக்காரர்கள் கூடிடும் சபையில்
வேடிக்கைப் பொருளாய் ஆனேனே
[வேடிக்கை]

பருவத்தின் மெருகினை நினைத்தேனே
குலப்பாவையர் பெருமையை மறந்தேனே
ஒருவரின் மார்பினில் உயிருள்ளவரையிலும்
ஒன்றாய் வாழ்வதை மறந்தேனே
[வேடிக்கை]



கலைகளை நாடிடும் கன்னியரும்
அதை கருத்தினில் தேடிடும் தோகையரும்
இந்த பாவையின் வாழ்வினை பாடமென்றே கொண்டு
பண்புடன் அன்புடன் வாழியவே [வேடிக்கை]

இயற்றியவர் : **கவிஞர் கண்ணதாசன்** பாடியவர் : **பானுமதி**

மனதில் மனதை வைத்த பின்னால்
மௌனம் கொள்வதும் ஏனோ
வந்ததில் பாதி எனக்கு தராமல்
மறைத்து நிற்பதும் ஏனோ

ஆலந்தளிர் போல் உள்ளம் இருக்கும்
அடுத்தவர் கண்ணில் தெரியாது
அதில் ஆயிரம் ஆயிரம் ஆசைகளிருக்கும்
வார்த்தையில் வருவது கிடையாது [மனதில்]

ஒளி மயமான தீபமிருந்தும்
இரவின் சிந்தனை ஏனோ
உண்மை வடிவம் அருகிலிருந்தும்
உள்ளம் மயங்குவதேனோ [மனதில்]

இயற்றியவர் : **கவிஞர் கண்ணதாசன்** பாடியவர் : **பானுமதி**

ஒருவருக்கே வளர்ந்திருந்தேன்
ஒருவரையே நினைத்திருந்தேன்
ஒருவருக்கே மலர்ந்திருந்தேன்
ஒருவருக்கே வாழ்ந்திருந்தேன்

நான் விழிக்கும் வேளை வந்தது என்று மனது சொன்னது
அவர் தூங்கி விட்டார் என்று ஒரு சேதி வந்தது
மணம் முடிக்கும் வேளை வந்தது என்று மனது சொன்னது
அவர் முடிந்துவிட்டார் என்று ஒரு சேதி வந்தது

ஆற்று வெள்ளம் கரைகடந்து தெருவில் வந்தது
காற்றடித்து கடல் குமுறி ஊரழிந்தது
நேற்று வரை கன்னி என்ற பெயரிருந்தது—இந்த
நேரமுதல் மணம் இழந்த நிலையும் வந்தது [நான் விழிக்கும்]

சாய்ந்த மரம் தலை நிமிர்ந்து தழைப்பதும் உண்டு
தேய்ந்த நிலா மறுபடியும் வளர்வதும் உண்டு
வந்த சேதி கனவு போல மாறிவிடாதா
என் மனதில் அவர் வைத்த கொடி மலர்ந்துவிடாதா
மலர்ந்துவிடாதா......மலர்ந்துவிடாதா



இயற்றியவர் : **மதுரை தியாகராசன்** பாடியவர் : **பி. பி. ஸ்ரீனிவாஸ்**

இரவில் மடியில் உலகம் உறங்கும்
நிலவின் அழகில் மலரும் மயங்கும்
என் மன வேதனை யாறறிவார்
உண்மையை சொன்னால் யாருணர்வார் [இரவின் மடியில்]

பழகிய நினைவை பறித்துக் கொண்டானே
புதியதோர் உறவை கொடுத்து நின்றானே
கலங்கிடும் என்னை சாட்சி வைத்தானே
காட்சியில் மறையும் என் இறைவன்
இறைவன — இறைவன் [இரவின் மடியில்]

உள்ளே ஒருவன் உறங்குகின்றானே
வெளியில் ஒருவன் உலவுகின்றானே
எல்லாம் தெரிந்தும் ஊமையைப்போலே
இருக்கின்றானே என் தலைவன்
தலைவன் தலைவன் [இரவின் மடியில்]

